25th March 1961]

மாற்றுவதற்கு அவர்களிடையே மன மாற்றம்தான் அவசியமே அல்லாமல் அந்த மாதிரி ஆத்திரம் ஊட்டும்படி பேசுவது, எக்ஸ்டெம்போராக, பல விதமாகப் பேசினால் பலருக்கு மனம் புண்படும்படி இருக்கிறது. இதில் எதிர் பார்த்த பலனுக்கு பதில் விரோதமான பலன் விளைவதால், அவதிப்படுவது அவர்களல்ல, இங்கு இருப்பவர்கள் தான். அந்த மாதிரி விளைவுகள் ஏற்படாமல் செய்யவேண்டியது இந்த அரசாங்கத்திலுள்ளவர்களுடைய கடமை அல்லவா? அதைப் பற்றி அவர்கள் யோசிப்பார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM: பேச்சினால் சிலருக்கு மனப்புண் ஏற்பட்டு விட்டதாகச் சொன்னார்கள். தீண்டாமையை அனுசரிப்பதால் தீண்டாமைக்கு உட்படுகிறவர்களுக்கு எவ்வளவு மனப்புண் ஏற்படும் என்று கனம் அங்கத்தினர் அவர்கள் யோசித்திருந்தால் பேசியதைப் பற்றி அவ்வளவு ஆட்சேபித்திருக்க மாட்டார்கள் என்பது எனது கருத்து.

*Siruvani river water to Coimbatore*

*1081 Q.—SRI S. M. ANNAMALAI: கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

சிறுவாணி ஆற்றுத் தண்ணீரை கோயம்பத்தூருக்கு குடி தண்ணீருக்காக பயன்படுத்துவதைக் குறித்து இரண்டு மாநில முதலமைச்சர்களும் பேசி முடிவு கண்டார்களா? விவரமென்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU: Not yet, Sir. Does not arise.

SRI S. M. ANNAMALAI: ஸார், இது பல ஆண்டுகளாக உள்ள பிரச்னை. கேரள முதல் மந்திரி சிறுவாணித் தண்ணீரைக் கொடுக்க முடியாது என்று கூறியது சர்க்காருடைய கவனத்திற்குக் கொண்டு வரப்பட்டதா? அதன் மீது என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்?

THE HON. SRI M. A. MANICKAVELU: இதைப் பற்றி அந்த ராஜ்ய முதல் மந்திரி பரிசிலனை செய்து, அவர்களைச் சந்திப்பதற்கு அதுபற்றி எழுதுவதாகச் சொல்லியிருக்கிறார்கள்.

*Hostel Day (Madras Engineering College)*

*1082 Q.—SRI V. K. KOTHANDARAMAN: கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னையிலுள்ள பொறியியல் கல்லூரியின் விடுதி விழாக்கொண்டாட்டத்திற்கு விடுதியில் தங்காது கல்வி பயிலும் மாணவர்களிடமிருந்தும் நன்கொடை வசூலிக்கப்பட்டதா?

(இ) அப்படியானால், அதன் காரணமென்ன?